

**வெடிபொருட்கள் குறித்து விழிப்புணர்வின்மையால்**

யாழ்ப்பாணத்தில் மாணவர்கள் இருவர் உயிரிழப்பு

PAGE 4



**மென் உணவுத் திட்டம் நாளொன்றுக்கு 2.7 கி.கிராம்**

இது உலக உணவுத் திட்டத்தினால் வழங்கப் படும் உதவிகளுக்கு மேலதிகமானது

PAGE 5



**இருபதாண்டு அகதி வாழ்விற்கு முற்றுப்புள்ளி...**

மேலும் சில வசதிகளைக் கோரி நிற்கும் முசலியில் மீளக் குடியமர்த்தப்பட்ட மக்கள்

PAGE 8


# மீண்டும் வாழ்வோம்

மීන්ඩුම් වාල්වෝම්

பக்கங்கள் Pages 8 | Vol 2 | No 53

இலவச பிரதி Free Copy

Lifeline | Humanitarian Information For IDPs

21.02. 2010

இடம்பெயர்ந்த மக்களுக்கான மனிதாபிமான தகவல் பரிமாற்றம்


## பொதுத் தேர்தலுக்கு முன்னர் 90 வீதமானோர் மீள்குடியமர்த்தப்படுவர்

### வவுனியா மாவட்ட அரச அதிபர் தெரிவிப்பு

*எஸ். நிஸாம் எம். ஸுஹைல்*

வவுனியா நிவாரணக்கிராமங்களில் தங்கவைக்கப்பட்டிருக்கின்ற மக்களின் மீள்குடியேற்றம் துரிதப்படுத்தப்பட்டுள்ளது.

இதுவரை 175,000 பேர் மீளக்குடியமர்ந்துள்ளனர். 60,000 பேர்வரையிலானவர்களே வவுனியா நிவாரணக்கிராமங்களில் உள்ளனர் என அனர்த்த நிவாரண சேவைகள் அமைச்சர் ரிஷாட் பதியுதீன் தெரிவித்தார்.

'அவர் தொடர்ந்தும் கூறுகையில், மீள்குடியேற்றம் மிதிவெடியகற்றல் பணிகளோடு தொடர்ந்து நடைபெற்று வருகின்றது. இந்த மக்களுக்குத் தேவையான வசதிகளை செய்துகொடுக்கின்ற பொறுப்பை ஏற்றுக்கொள்ளுமாறு அந்தந்த அரசாங்க அதிபர்களுக்கு நாங்கள் வேண்டுகோள் விடுத்துள்ளோம். அவர்கள் அந்தப் பணிகளை அவர்களுடைய உத்தியோகத்தர்கள் மூலம் மீள்குடியேறிய மக்களுக்கு வழங்கி வருகின்றனர்' என தெரிவித்தார்.

கிளிநொச்சி மாவட்டத்தின் மீள்குடியேற்ற நடவடிக்கைகள் தொடர்பாக

> **உறவினர் நண்பர்களின் வீட்டில் இருக்கின்ற மக்கள் தாங்களாகவே சொந்த இடத்திற்கு வந்து அப்பிரதேச செயலாளரிடம் தொடர்பு கொண்டு அவர்கள் தமது சொந்த இடத்திற்கு செல்வதற்கான ஒழுங்குகளை மேற்கொள்ளலாம்.**

அம்மாவட்டத்தின் அரசாங்க அதிபர் ரூபவதி கேதீஸ்வரன் தெரிவிக்கையில், 'கிளிநொச்சி மாவட்டத்தில் கிட்டத்தட்ட 6,400 குடும்பங்களைச் சேர்ந்த 20,000இற்குட்பட்ட மக்கள் தங்களுடைய சொந்த இடங்களில் மீள்குடியமர்த்தப்பட்டுள்ளனர். அங்குள்ள பிரதேச செயலகப் பிரிவுகளான பளை, கந்தாவளை போன்ற பகுதிகளில் கண்ணிவெடியகற்றல் இடம்பெற்று வருகின்றது. பூநகரி மற்றும் கரச்சி போன்ற பகுதிகளில் கண்ணிவெடி அகற்றப்பட்டு தற்போது மீள்குடியேற்றம் இடம்பெற்று வருகின்றது. பூநகரிப் பிரதேச செயலகப்பிரிவில் வவுனியா நலன்புரி நிலையத்திலிருந்த அனைத்து மக்களும் மீள்குடியேற்றப்பட்டுள்ளனர். ஏனைய உறவினர், நண்பர்களின் வீட்டில் இருக்கின்ற மக்கள் தாங்களாகவே சொந்த இடத்திற்கு வந்து அப்பிரதேச செயலாளரிடம் தொடர்பு கொண்டு அவர்கள் தமது சொந்த இடத்திற்கு செல்வதற்கான ஒழுங்குகளை மேற்கொள்ளலாம். அதேவேளை, கராச்சி பிரதேச செயலகத்திற்கு உட்பட்ட 8 கிராம சேவகர் பிரிவுகளில் மீள்குடியேற்றப்பணிகள் நடைபெற்று வருகின்றன' என்றார்.

முல்லைத்தீவு மாவட்டத்தின் துனுக்காய் பிரதேச சபைக்குட்பட்ட பகுதிகளில் இதுவரை 2,711 குடும்பங்களைச்சேர்ந்த 7,982 பேர் மீள்குடியமர்ந்துள்ளனர். மாந்தை கிழக்கில் 1,994 குடும்பங்களைச் சேர்ந்த 5,937

» 4 ஆம் பக்கம்



நாட்டில் ஒற்றுமையை வலியுறுத்தி வவுனியா இராமநாதன் நலன்புரி நிலையத்தில் வசிக்கும் பா.சுவேந்திரன் வரைந்த ஓவியம்

## வாக்காளர் விண்ணப்பப்படிவங்கள் சமர்ப்பிப்பதற்கான கால எல்லை நீடிப்பு



*டி.சார்ள்ஸ் பீட்டர்ஸ்*

பொதுத் தேர்தலானது எதிர்வரும் ஏப்ரல் மாதம் நடைபெறவுள்ள நிலையில், அத் தேர்தலில் வாக்களிப்பதற்கான விண்ணப்பங்களை இடம்பெயர்ந்த மக்கள் தற்போது சமர்ப்பிக்க முடியும் என தேர்தல் திணைக்களம் அறிவித்துள்ளது. இதற்கான கால எல்லை

> **விண்ணப்பப்படிவங்களை கிராம அலுவலர் ஊடாகவும் முகாம்களிலும் பெற்றுக்கொள்ள முடியும்**

இம்மாதம் 26ஆம் திகதி வரை நீடிக்கப்பட்டுள்ளதாக அத்திணைக்களம் அறிவித்துள்ளது.

இது தொடர்பில் வவுனியா மாவட்ட உதவித் தேர்தல் ஆணையாளர் எம்.ஏ.எஸ்.கருணாநிதி கூறுகையில், 'நாட்டில் ஏற்பட்டிருந்த பாதுகாப்பற்ற சூழ்நிலை காரணமாக இடம்பெயர்ந்த மக்கள் தேர்தலில் வாக்களிப்பதற்கான தமது விண்ணப்பங்களைத் தற்போது பூர்த்தி செய்து சமர்ப்பிக்க முடியும். இவர்கள் தங்களுக்கான விண்ணப்பப் படிவங்களை கிராம அலுவலர் ஊடாகவும், முகாம்களிலும் பெற்றுக்கொள்ள முடியும். இந்த படிவத்தை பூர்த்தி செய்து எதிர்வரும் 26ஆம் திகதிக்கு முன்னர் அந்தந்த மாவட்டத்திற்குப் பொறுப்பான தெரிவு அத்தாட்சி அதிகாரியிடம் கையளிக்கவோ அல்லது தேர்தல் திணைக்களை தலைமையகத்திற்கு அனுப்பி வைக்கவோ நடவடிக்கை எடுக்க வேண்டும். விண்ணப்பிப்பவர்களுக்கு பொதுத் தேர்தலில் வாக்களிப்பதற்கான வாக்காளர் அட்டை விநியோகம் செய்யப்பட்டு வாக்களிப்பதற்கான சந்தர்ப்பம் வழங்கப்படும்' என்றார்.

## இடம்பெயர்ந்த மாணவர்களுக்கான விசேட பாடசாலைகள்



வடக்கிலிருந்து இடம்பெயர்ந்த மாணவர்களுக்கான விசேட பாடசாலையான வவுனியா காமினி மகாவித்தியாலயத்தின் கல்வி நடவடிக்கைகள் கடந்த செவ்வாய்க்கிழமை (16) வடமாகாண ஆளுநர் மேஜர் ஜெனரல் ஜீ.ஏ. சந்திரசிறி, அனர்த்த நிவாரண சேவைகள் மற்றும் மீள்குடியேற்ற அமைச்சர் ரிஷாட் பதியுதீன் ஆகியோரின் தலைமையில் உத்தியோகப்பூர்வமாக ஆரம்பிக்கப்பட்டுள்ளன.

இங்கு ஏறத்தாள 2,693 மாணவர்கள் கல்விகற்கும் அதேவேளை, 227 ஆசிரியர்களும் கற்பித்தல் நடவடிக்கைகளில் ஈடுபட்டு வருகின்றனர். மேலதிகமாக 500 மாணவர்கள் இந்தப்பாடசாலையில் சேர்க்கப்படலாம் என தாம் எதிர்பார்ப்பதாக வவுனியா காமினி மகாவித்தியாலயத்தின் அதிபர் பி.கே. சிவலிங்கம் தெரிவித்தார்.

பாடசாலைக்கான தளபாடவசதிகள் மற்றும் ஏனைய அடிப்படை வசதிகள் சிலவும்

> **வவுனியா காமினி மகாவித்தியாலயத்தின் கல்வி நடவடிக்கைகள் கடந்த 16ஆம் திகதி முதல் ஆரம்பம்**

பூர்த்தி செய்யப்பட்டுள்ளதாகவும் கற்றல் உபகரணங்களுக்கான பற்றாக்குறை நிலவுவதாகவும் அவை இன்னும் சில நாட்களில் பூர்த்தி செய்யப்படும் என தாம் எதிர்பார்ப்பதாகவும் அவர் மேலும் குறிப்பிட்டார்.

இந்நிலையில், இடம்பெயர்ந்த மாணவர்களுக்கான கல்வி நடவடிக்கைகளைத்

» 6 ஆம் பக்கம்



## ஹெய்டி

ஹெய்டியில் பூகம்பத்தால் பாதிக்கப்பட்ட விவசாயிகளின் வாழ்வாதாரங்களை முன்னெடுப்பதற்கு 23 மில்லியன் டொலர்களை ஐக்கிய நாடுகளின் உணவு மற்றும் விவசாய அமைப்பு வழங்கியுள்ளது. பூகம்பத்தால் பாதிக்கப்பட்ட மக்கள் உணவுப் பற்றாக்குறை காரணமாக பல்வேறு அசௌகரியங்களை எதிர்கொண்டு வரும் நிலையில், அவர்களின் வாழ்வாதாரங்களைக் கட்டியெழுப்புவதில் உதவி செய்ய வேண்டியது அனைவரினதும் கடமையாகும் என ஐக்கிய நாடுகளின் உணவு மற்றும் விவசாய அமைப்பின் பணிப்பாளர் நாயகம் ஜெக்குயிஸ் டியோப் தெரிவித்துள்ளார். அடுத்த மாதம் விவசாயப் பருவம் ஆரம்பிக்கப்படும் நிலையில் விவசாயிகளுக்கு முன்னுரிமை வழங்க வேண்டிய தேவை ஏற்பட்டுள்ளதாகவும் அவர் சுட்டிக்காட்டியுள்ளார்.



## பாகிஸ்தான்

பாக்கிஸ்தான் - ஆப்கான் எல்லைப் பகுதியான ஒராக்சாயி பகுதியில் இடம்பெயர்ந்தவர்களின் எண்ணிக்கை 23 ஆயிரமாக அதிகரித்துள்ளதாக மனிதாபிமான விவகாரங்களுக்கான ஒருங்கிணைப்பு தெரிவித்துள்ளது. கடந்த வருடம் டிசம்பர் மாதம் முதல் இதுவரையான காலப்பகுதியில் இந்த எண்ணிக்கை அதிகரித்துள்ளதாக அந்த அமைப்பு தெரிவித்துள்ளது. தலிபான்கள் மக்களின் நிலங்களை சூறையாடி வருவதையடுத்து அவர்கள் தமது சொந்த இடங்களை விட்டு அகதிகளாக வெளியேற வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. சொந்த இடங்களை விட்டு வெறும் கையுடன் வெளியேறியுள்ள நாம் இன்று அகதிகளாக வாழ வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டுள்ளதாக ஒராக்சாயி பகுதியில் அகதியாக வாழ்ந்து வரும் பாஷால் கான் என்பவர் தெரிவித்துள்ளார்.

# பூகோள அரங்கில் மனிதாபிமானப் பணிகள்

தொகுப்பு : நிரஞ்சனி ரோலண்ட்






## ஷாட்

மத்திய ஆபிரிக்க நாடான ஷாட்டில் ஐ.நா வின் மனிதாபிமானப் பணியாளர்கள் தொடர்ந்தும் சேவையை வழங்குவதற்கு அந்நாட்டு அரசு அனுமதி வழங்க வேண்டும் என சர்வதேச மன்னிப்புச் சபை தெரிவித்துள்ளது. ஐ.நா வின் மனிதாபிமானப் பணியாளர்கள் ஷாட் நாட்டில் மனிதாபிமானப் பணிகளை மேற்கொள்வதற்கு வழங்கப்பட்ட காலக்கெடு அடுத்த மாதம் 15ஆம் திகதியுடன் முடிவடைகின்றது. இதனை சுட்டிக்காட்டியே சர்வதேச மன்னிப்புச் சபை இவ்வாறு தெரிவித்துள்ளது. மனிதாபிமானப் பணியாளர்கள் அந்நாட்டை விட்டு வெளியேறும் பட்சத்தில் அங்கு அகதிகளாக வாழ்ந்து வரும் சுமார் 2 இலட்சத்து 50 ஆயிரம் பேர் ஆயுதக்குழுக்களினால் தாக்கப்படுவார்கள் என சர்வதேச மன்னிப்புச் சபை சுட்டிக்காட்டியுள்ளது.



## ஈராக்

ஈராக்கிலுள்ள இடம்பெயர்ந்த மக்களுக்கு மனிதாபிமான உதவிகளை வழங்குவதற்கு எக்ட் இன்டர்நெஷனல் எனப்படும் சர்வதேச தேவாலயங்களின் ஒன்றிணைப்பு முன்வந்துள்ளது. சர்வதேச ஒதொடெக்ஸ் கிறிஸ்தவ தர்மஸ்தாபனம் மத்திய கிழக்கு தேவாலயங்களின் சபை மற்றும் நோர்வே தேவாலயங்களின் கூட்டமைப்பு ஆகியன சர்வதேச தேவாலயங்களின் ஒன்றிணைப்பில் அங்கம் பெறுகின்றன. 2008ஆம் ஆண்டு ஈராக்கில் 4 மில்லியன் மக்கள் உணவுப் பற்றாக்குறையால் அவதியுற்றதாக அந்த அமைப்பு ஏற்கனவே தெரிவித்திருந்தது. ஈராக்கில் தற்போது நிலைமைகள் திருப்தியளிக்கும் விதத்தில் மாறி வருகின்ற போதிலும் அங்குள்ள மக்களுக்கு மனிதாபிமான உதவிகளை வழங்குவதற்கான தேவை தொடர்ந்தும் நிலவுவதாக அவ்வமைப்பு மேலும் சுட்டிக்காட்டியுள்ளது.

உங்கள் கதைகள்

# அலையும் நெஞ்சங்கள்

சாகீர் மொஹம்மட்

ரேவதி, கண்ணன், மஞ்சுளா, ராகவன் என்ற நான்கு பாத்திரங்களுக்குள் பின்னப்பட்டதாய் நகர்கிறது 'அலையும் நெஞ்சங்கள்' நாடகம்.

**'மீண்டும் வாழ்வோம்' வானொலி நிகழ்ச்சியில் உங்கள் கதைகள் தொடர் நாடக வடிவில் இடம்பெற்று வருகின்றன. ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் ஒலிபரப்பாகும் நாடகங்களின் தொகுப்பை இப்பத்திரிகை வாயிலாகவும் உங்களுக்குத் தருகிறோம். கடந்த வாரம் இடம்பெற்ற 'அலையும் நெஞ்சங்கள்' நாடகத்தின் சுருக்கம் இதோ:**

மஞ்சுளாவுடனான காதலை விடும்படியும் அது சமூகம் ஏற்காத தப்பான உறவு என்றும் கண்ணனை கடிந்துகொள்கிறாள் ரேவதி. காலை இழந்துவிட்ட கணவனிடம் தனக்கான நல்வாழ்வை எதிர்பார்க்க முடியாது என்றுதானே உன் நண்பி மஞ்சுளா என்னைக் காதலிக்கிறாள் என்று மாற்றான் மனைவியுடனான தன் காதலை நியாயப்படுத்துகிறான் கண்ணன். மஞ்சுளாவின் கணவன் ராகவனின் பக்கம் நின்று அவனுக்காக அனுதாபப்பட்டு பேசும் ரேவதி தன் நண்பி மஞ்சுளாவின் வாழ்வு பாழாவதை அனுமதிக்கமுடியாது என்றும் அவளை நீ திருமணம் செய்யவிடப்போவதில்லை என்றும் கண்ணனிடம் சபதம் செய்வது ஒரு பெண்ணுக்கான மற்றொரு பெண்ணின் அனுதாபத்தினை காட்டி நிற்கிறது.

ராகவன் தன் ஆதங்கத்தையும் ஆத்திரத்தையும் நண்பி ரேவதியிடம் வெளிப்படுத்தியதன் மூலம் தன்னை அவமானப்படுத்திவிட்டதாக கணவன் ராகவனுடன் வாக்குவாதப்படுகிறாள் மஞ்சுளா. ஊனமுற்றுப்போன உங்களோடு வாழ்வதை விட புதிய காதல் உறவே பெரிது என்று சொல்லும் தன்மனைவியிடம் தமது பழைய காதல் கதையையும் திருமண வாழ்வின் ஆரம்ப நாட்களையும், தான் கண்ணிவெடிபட்டு காலை இழந்துவிட்டதன் பின்னரான மனைவியினது ஆரம்பநாட்களின் ஆறுதலான வார்த்தைகளையும் ஆதங்கத்தோடு மீட்டிப்பார்க்கிறான் ராகவன்.

காலத்தின் தேவை ஒரு முடவனோடு வாழ்வதல்ல என்று பிடிவாதமாய் இருக்கும் மஞ்சுளாவிடம் உன் விருப்பம்போல் செய்துகொள் என்று விட்டுவிடும் ஒரு கணவனின் வேதனையை இங்குதான் புரிந்துகொள்ள முடிகின்றது.

திருமணத்துக்கு முன்னரான ராகவன், மஞ்சுளா இவர்களது காதலின் இனிமையான இசையும் மீட்டப்படுகிறது. அந்தக்காதல் இன்று ராகவன் காலை இழந்துவிட்டதன் பின்னர் மஞ்சுளாவுக்கு கசத்துப்போனதன் நியாயத்தை எப்படித்தான் நியாயப்படுத்துவது?

கணவனின் பாசத்தை புரிந்துகொள்ளாமல் அவனை நேசிக்க மறுக்கும் மஞ்சுளாவுக்கு புத்திசொல்கிறாள் ரேவதி. 'என் வாழ்க்கை முக்கியம் என்று நீ நினைச்சா, எனக்கு அட்வைஸ் வேணாம்... டைவஸ் வாங்கிக்கொடு அது போதும்' என்று மஞ்சுளா புலம்புவது புரிந்துகொள்ளவே முடியாத ஒரு பெண்ணின் மனதினது ஏக்கம் எனலாமா?

இறுதியாய்த் தெரிகிறது கதையின் முடிவு. தன் மனைவியின் விருப்பத்திற்குக் குறுக்காய் நில்லாமல் ஒதுங்க முடிவெடுத்து ஒரு மடலோடு விடை பெறுகின்றான் ராகவன். மடலை வாசிக்கிறாள் மஞ்சுளா. என்றும் மாறாத தன் காதலையும் பாசத்தையும் தன் வேதனையையும் மடலில் வடித்துவிட்டு உனக்கான வாழ்வை நீயே விருப்பம்போல் தேடிக்கொள் என்று விடைபெற்றுப் போன கணவனின் அருமை, காலம் கடந்துதான் மஞ்சுளாவுக்குப் புரிகிறது. புறப்படுகிறாள் கணவனைத்தேடி. ஒரு உண்மைப்பாசம் என்றுமே தோற்காது என்பதற்கு ராகவன் தான் நமக்கு ஆதாரம்.

# காப்பகங்களிலுள்ள இடம்பெயர்ந்த சிறுவர்களுக்கு சட்ட ஆவணங்களைப் பெற்றுக்கொடுக்க நடவடிக்கை

*சு. சத்தியா*

வடக்கில் இறுதியாக இடம்பெற்ற யுத்தத்தின் போது சில சிறுவர்கள் தமது பெற்றோர்களை இழந்த நிலையில் முக்கிய சட்ட ஆவணமான பிறப்புச்சான்றிதழ் இன்றி உள்ளதுடன் அதனை பெற்றுக்கொள்வதில் பல சிர மங்களை எதிர் கொள்வதாகத் தெரிவிக்கப்படுகின்றது.

பிறப்புச்சான்றிதழ் இன்மையால் அடையாள அட்டையைப் பெற்றுக்கொள்வது, விளை யாட்டுப் போட்டிகளில் மற்றும் மாகாண மாவட்ட மட்ட தமிழ் மொழித்தின போட்டிக ளில் பங்குபற்றுவது சிரமமாக உள்ளது என ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி அருளகம் சிறுவர் காப்பகத்தில் வசிக்கும் 17 வயதுடைய சிவ ஞானம் நவதீசம் குறிப்பிட்டார்.

ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி அருளகம் காப்ப கத்தில் மொத்தமாக 230 சிறுவர்கள் வசித்து வருகின்றனர். இவர்களில் சுமார் 100 பேர் வரை பிறப்புச்சான்றிதழ் இன்றி உள்ளனர்

> **கடந்த வருடம் டிசம்பர் மாதம் முதல் வவுனியா சர்வோதய நிறுவனம் சிறுவர் காப்பகங் களில் வாழ்பவர்களுக்கு சட்ட ஆவணங்களைப் பெற்றுக்கொ டுப்பதற்கான திட்டத்தினை முன்னெடுத்து வருகின்றது.**



■ **வைப்பகப்படம்** நலன்புரி கிராமங்களிலுள்ள சிறுவர்கள்

எனவும் கிளிநொச்சி மற்றும் முல்லைத்தீவு மாவட்டங்களைச் சேர்ந்தவர்களுக்கு பிறப் புச்சான்றிதழ் விரைவில் பெற்றுக்கொடுக்கப் படுவதில்லை எனவும் இதனால் இவர்களை பாடசாலைகளில் இணைக்கும்போது பல சி ரமங்களுக்கு முகங்கொடுக்க வேண்டியிருப் பதாகவும் ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி அருளகம் காப்பகத்தின் செயலாளர் ஆறுமுகம் நவரட் ணராசா தெரிவித்தார்.

கிளிநொச்சி முல்லைத்தீவு மாவட்டங்க ளைச் சேர்ந்தவர்களுக்கு பிறப்புச்சான்றிதழ்க ளைப் பெற்றுக்கொடுப்பதில் காலதாமதம் ஏற் படுவதற்கான முக்கிய காரணம், நாங்கள் சட்ட ஆவணங்களைப் பெறுவதற்கான விண்ணப் பங்களை கொழும்பிற்கு அனுப்பி மீண்டும் அதனைப் பெறுவதில் சிக்கல்களை எதிர்நோக் குவதாகும். இதற்கென சுமார் ஒரு மாதகாலம் தேவைப்படுகின்றது என சர்வோதய நிறுவ னத்தின் நீதிச்சேவையின் மாவட்ட இணைப் பாளர் மங்கையற்கரசி குறிப்பிட்டார்.

கடந்த வருடம் டிசம்பர் மாதம் முதல் வவுனியா சர்வோதய நிறுவனம் சிறுவர் காப்பகங்களில் வாழ்பவர்களுக்கு சட்ட ஆவணங்களைப் பெற்றுக்கொடுப்பதற்கான திட்டத்தினை முன்னெடுத்து வருகின்றது.

ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி அருளகம், டொன் பொஸ்கோ, தற்காலிக சிறுவர் பாதுகாப்பு இல்லம் ஆகிய சிறுவர் காப்பகங்களில் வசி க்கும் பிள்ளைகளுக்கு இத்திட்டத்தினூடாக ச ட்ட ஆவணங்கள் பெற்றுக்கொடுக்கப்பட்டு வருகின்றன.

சர்வோதய நிறுவனத்தினால் ஸ்ரீ அகிலாண் டேஸ்வரி அருளகம் காப்பகத்திலுள்ளவர்க ளுக்கு 12 உத்தேச வயது சான்றிதழ்களும் 99 பிறப்பு அத்தாட்சிப் பத்திரத்திற்கான பிர தியும் டொன்பொஸ்கோ சிறுவர் இல்லத்தில் உள்ளவர்களுக்காக 75 பிறப்பு அத்தாட்சி பத்திரமும் 20 உத்தேச வயது சான்றிதழும் பெற்றுக்கொடுக்கப்பட்டுள்ளது.

அதேபோன்று, 29 பிறப்பு அத்தாட்சிப் பத்தி ரத்திற்கான பிரதியும், 20 உத்தேச வயது சான்றி

> *“ சிறுவர் இல்லங்களில் வாழும் சிறுவர்களுக்கு தந்தையினு டைய பெயர் தெரிந்திருக்கின்ற போதும் தாயினுடைய பெயர் தெரியாமலிருப்பதாகவும் அவர்களை உளவியல் ரீதியான தாக்கங்களுக்கு உள்ளாகாத வாறு அணுகவேண்டிய நிலை காணப்படுகிறது ”*

தழும் தற்காலிக சிறுவர் பாதுகாப்பு இல்ல பிள் ளைகளுக்காக பெற்றுக்கொடுக்கப்பட்டுள்ளது.

சிறுவர் இல்லங்களில் வாழும் சிறுவர்க ளுக்கு தந்தையினுடைய பெயர் தெரிந்திருக் கின்றபோதும் தாயினுடைய பெயர் தெரியா மலிருப்பதாகவும் அவர்களை உளவியல் ரீதியான தாக்கங்களுக்கு உள்ளாகாதவாறு அணுகவேண்டிய நிலை காணப்படுவதாகவும் அவர்கள் தொடர்பான விடயங்களை சேக ரிக்கும்போது பல சவால்களுக்கு முகங்கொ டுக்க வேண்டியுள்ளதாகவும் மங்கையற்கரசி மேலும் கூறினார்.

சட்ட ஆவணங்களானது எமது நாட்டைப் பொறுத்தமட்டில் மிகவும் அத்தியாவசியமா னதாகும். பெற்றோர்கள் இன்மையால் தம் மைப் பற்றிய முழுவிபரங்கள் கூட தெரியாத நிலையில் வாழும் சிறுவர்களின் எதிர்கால நலனுக்கு இவ்வாறான திட்டங்கள் பெரிதும் உறுதுணையாக அமையும்.

# இடப்பெயர்வின்போது தவறவிடப்பட்ட வாகனங்களை மீளப் பெற்றுக்கொடுக்க நடவடிக்கை



**வைப்பகப் படம்:**யுத்தத்தின்போது இடம்பெயரும் மக்கள்

*ஜெகதீஸ்வரி இராமசாமி*

நாட்டில் அண்மைக்காலங்களில் ஏற் பட்ட இடப்பெயர்வுகளின்போது மக்கள் தவறவிட்ட தமது வாகனங்களை மீளப் பெற்றுக்கொடுக்க அரசினால் நடவடிக்கை கள் முன்னெடுக்கப்பட்டுள்ளன.

வடக்கில் மீள்குடியேற்றப் பணிகள் துரி தப்படுத்தப்பட்டு வருகின்ற இந்தச் சந்தர்ப் பத்தில் தாம் தொலைத்த வாகனங்களை மீட்டுக்கொடுக்க நடவடிக்கை எடுக்கப் படின் அது தமக்குப் பெரும் உதவியாக இருக்குமென கிளிநொச்சி மாவட்டத்தைச் சேர்ந்த சித்திரவேல் தெரிவித்துள்ளார்.

அண்மையில் முல்லைத்தீவுப் பிரதேசங்கள் சிலவற்றிற்கு யாழ். ஆயர் தோமஸ் சௌந்தர நாயகம் விஜயமொன்றை மேற்கொண்டிருந்த போது மோட்டார் மற்றும் துவிச்சக்கர வண்டி களை அங்கு காணக்கூடியதாக இருந்ததாகவும் விசாரித்தபோது அவை அரசாங்க அதிபரின் அனுமதியுடனேயே வழங்கப்படும் எனத் தெரி விக்கப்பட்டதாகவும் குறிப்பிட்டுள்ளார்.

இதேவேளை, முல்லைத்தீவு அரசாங்க அதிபர் திருமதி இமெல்டா சுகுமார் சில பிரதேசங்களுக்குச் சென்று மக்களால் தவற விடப்பட்டுள்ள வாகனங்களைப் பார்வை யிட்டுள்ளார். அந்தப் பிரதேசத்தில் மக்களால் தவறவிடப்பட்ட வாகனங்கள் தொடர்பான விபரங்களைத் தமக்கு அனுப்பிவைத்தால் அதனை இராணுவ இணைப்பதிகாரிகளுக்கு அனுப்பி பரிசீலனை மேற்கொண்ட பின்னர் அவரவர் வாகனங்களைப் பெற்றுக்கொடுப் பதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப் படும் எனவும் தெரிவித்துள்ளார்.

இந்நிலையில், புதுக்குடியிருப்புப் பகுதியில் பல மோட்டார் சைக்கிள்கள் மீட்கப்பட்டுள்ள தாக வடமாகாண ஆளுனர் மேஜர் ஜெனரல் சந்திரசிறி குறிப்பிட்டுள்ளார். 200 மோட்டார் சைக்கிள்களை ஏற்கனவே தாம் மீட்டுள்ள தாகவும் அவற்றின் பதிவுப்பத்திரம் மற்றும் ஏனைய ஆவணங்கள் தொடர்பில் மோட்டார் போக்குவரத்து திணைக்களத்தை தொடர்பு கொண்டு அவற்றை உறுதிப்படுத்திக்கொண் டுள்ளதாகவும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

இது தொடர்பில் அவர் மேலும் கூறுகையில், ‘அனைத்து ஆவணங்களும் எம்மிடம் உள்ள ன. தங்களது மோட்டார் சைக்கிள் குறித்து யாராவது அறிந்துகொள்ள விரும்பினால் எம்மை தொடர்பு கொள்ளலாம்’ என்றார்.

# வெடிபொருட்கள் குறித்து விழிப்புணர்வின்மையால் யாழ்ப்பாணத்தில் மாணவர்கள் இருவர் உயிரிழப்பு

*ஏ. சொர்ணலிங்கம்*

கடந்த திங்கட்கிழமை (15) யாழ்ப்பாணம் கொழும்புத்துறையில் தவறுதலாக வெடிபொருள் வெடித்ததில் இரு மாணவர்கள் உயிரிழந்ததையடுத்து மாணவர்கள் மத்தியில் இது தொடர்பான விழிப்புணர்வு அதிகரிக்கப்படவேண்டியது அவசியமாகியுள்ளது.

இந்த சம்பவம் குறித்து ஐக்கிய நாடுகள் கண்ணிவெடி அகற்றும் திட்டத்தின் சிரேஷ்ட திட்ட முகாமையாளர் ஹூரியா கர்தாகி அவர்களைக் கேட்டபோது, ‘இந்த விடயத்தைப் பொறுத்தவரையில் விழிப்புணர்வுத் திட்டங்களை முழுமையாக முன்னெடுக்கின்றோம் என்று கூறுவது கடினம். இதற்கு சிறந்த உதாரணம் யாழ்ப்பாணத்தில் நடந்த இந்த விபத்தினால் இரண்டு மாணவர்கள் உயிரிழந்தது. எனவே விழிப்புணர்வு நடவடிக்கைகளை மாணவர்கள் மத்தியில் மேலும் துரிதப்படுத்த வேண்டிய தேவை இருக்கின்றது’ என தெரிவித்தார்.

அவர் மேலும் தெரிவிக்கையில், தற்போது முக்கியமாக மீளக் குடியமர்த்தப்படும் இடங்களில் இதுபற்றிய கவனம் செலுத்தப்படவேண்டும் எனவும் யுத்தம் நடைபெற்ற ஏனைய பிரதேசங்களையும் அவதானிக்க வேண்டும் எனவும் தெரிவித்தார்.

யுத்தம் இறுதியாக இடம்பெற்ற வன்னிப் பகுதியிலேயே மக்களின் மீள்குடியேற்ற நடவடிக்கைகள் தொடர்ந்தும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இப்பகுதிகளில் வெடிக்காத வெடி பொருட்கள் இருப்பதற்கான சாத்தியக்கூறுகள் மிகவும் அதிகமாகவிருப்பதுடன், இவ்வகையான வெடிபொருட்கள் பல ஆண்டுகள் கடந்த பின்னரும் வெடிப்பதற்கான வாய்ப்புகள் இருக்கின்றது.

***யுத்தம் இறுதியாக இடம்பெற்ற வன்னிப் பகுதியிலேயே மக்களின் மீள்குடியேற்ற நடவடிக்கைகள் தொடர்ந்தும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இப்பகுதிகளில் வெடிக்காத வெடி பொருட்கள் இருப்பதற்கான சாத்தியக்கூறுகள் மிகவும் அதிகமாகவிருப்பதுடன், இவ்வகையான வெடிபொருட்கள் பல ஆண்டுகள் கடந்த பின்னரும் வெடிப்பதற்கான வாய்ப்புகள் இருக்கின்றது.***

***யாழ்ப்பாணத்தில் இடம்பெற்ற சம்பவத்திற்குப் பின்னர் ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்குமான விழிப்புணர்வு நடவடிக்கைகள் தொடர்ந்தும் முன்னெடுக்கப்படவுள்ளது***

யாழ்ப்பாணத்தில் இடம்பெற்ற இந்த சம்பவத்திற்குப் பின்னர் ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்குமான விழிப்புணர்வு நடவடிக்கைகள் தொடர்ந்தும் முன்னெடுக்கப்படவுள்ளதாக யாழ்ப்பாண வலயக் கல்விப் பணிமனையின் ஆசிரியர் நிலையத்தின் முகாமையாளர் ஞானமணி இரத்தினசிங்கம் தெரிவித்தார்.

‘இராணுவத்தினரால் கைவிடப்பட்ட வெடிக்காத வெடிபொருட்களிலிருந்து பாதுகாத்துக் கொள்வது தொடர்பாக செயலமர்வொன்று திட்டமிடப்பட்டிருந்தது. ஆனால் அவ்வமர்வு இடம்பெறவில்லை. தற்போது மாணவர்களுக்கு விழிப்புணர்வு வழங்கும் வகையிலான நிகழ்ச்சித் திட்டம் ஒன்றை மேற்கொள்ளத் திட்டமிட்டிருக்கின்றார்கள். இது தொடர்பாக நேரடியாக மாணவர்களுடன் உரையாடும்படி ஆசிரியர்களுக்கு அறிவிக்கப்பட்டிருக்கின்றது’ என ஞானமணி இரத்தினசிங்கம் மேலும் தெரிவித்தார்.

சர்வோதய நிறுவனமானது கண்ணிவெடி மற்றும் வெடிக்காத வெடிபொருட்கள் தொடர்பான விழிப்புணர்வு நிகழ்ச்சிகளை யாழ்ப்பாண மாணவர்கள் மத்தியில் கடந்த டிசம்பர் மாதத்திலிருந்து நடத்தி வருகின்றது. அண்மைக்காலங்களில் யாழ்ப்பாணத்தில் டெங்கு நோய் பரவி வந்தமையினால், அதனைக் கட்டுப்படுத்தும் முயற்சிகளிலேயே அதிக கவனம் செலுத்தப்பட்டது. எனினும், பாடசாலைகளில் கண்ணிவெடி மற்றும் வெடிக்காத வெடிபொருட்கள் தொடர்பான விழிப்புணர்வு நிகழ்ச்சிகள் தொடர்ந்தும் முன்னெடுக்கப்பட்டதாக அவர் தெரிவித்தார்.



படம் எஸ்.என்.மணிவாணன்

**வெடிபொருட்கள் மற்றும் கண்ணிவெடிகள் குறித்து விளக்கமளிக்கும் கண்ணிவெடியகற்றும் நிபுணர்குழு.**

# முகாம்களிலுள்ள சிறுவர் நட்புறவுக் கூடங்களுக்கு ஐக்கிய இராச்சியம் நிதியுதவி



**வைப்பகப்படம் -** நலன்புரி நிலையங்களில் உள்ள சிறுவர்கள் சிலர்

*எஸ்.பெல்லா டலிமா*

யுத்த சூழலின்போது இடம்பெயர்ந்து முகாம்களில் தங்கவைக்கப்பட்டுள்ள சிறுவர்களுக்கென UNICEF நிறுவனம் சில தொண்டு நிறுவனங்களுடன் இணைந்து நலன்புரி நிலையங்களில் சிறுவர் நட்புறவுக்கூடங்களை அமைத்து அதனூடாக பல செயற்றிட்டங்களை முன்னெடுத்து வருகின்றது. இதன் மூலம் அண்ணளவாக 21,500 சிறுவர்கள் பயனடைந்து வருவதாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இடம்பெயர்ந்த சிறுவர்களை உளவியல் தாக்கங்களிலிருந்து விடுவிக்கும் நோக்குடன் ஆரம்பிக்கப்பட்டுள்ள இந்த சிறுவர் நட்புறவுக் கூடங்கள் மூலமாக கலாசார நிகழ்வுகள் மற்றும் விளையாட்டுப் போட்டிகள் முன்னெடுக்கப்பட்டு சிறுவர்களின் மன நலனில் முன்னேற்றங்காண முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

வடக்கிலும் கிழக்கிலும் நிறுவப்பட்டுள்ள முகாம்களில் 130 சிறுவர் நட்புறவுக்கூடங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவற்றில் 66 சிறுவர் நட்புறவுக்கூடங்களுக்கு ஐக்கிய இராச்சியம் நிதியுதவி வழங்கியிருப்பதாக பிரித்தானிய உயர்ஸ்தானிகராலயம் கடந்த 17ஆம் திகதி தெரிவித்துள்ளதென பாதுகாப்பு அமைச்சின் உத்தியோகபூர்வ இணையத்தளத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

‘சிறுவர்கள் மற்றும் இளம்பராயத்தினர் மத்தியில் நாட்டில் நிலவிய யுத்தமானது பாரிய உளவியல் தாக்கங்களை உண்டுபண்ணியுள்ளது. சமூகக் கட்டமைப்புகளில் ஏற்பட்ட சீரற்ற நிலை காரணமாக சிறுவர் துஸ்பிரயோகங்கள் அதிகரித்து, அவை சிறுவர்களை மேலும் பாதிப்புக்குள்ளாகியிருக்கின்றன’ என பிரித்தானிய உயர்ஸ்தானிகராலயம் குறிப்பிட்டிருப்பதாக பாதுகாப்பு அமைச்சின் இணையத்தளத்தில் செய்தி வெளியிடப்பட்டுள்ளது.

இதில் மேலும் குறிப்பிடப்பட்டுள்ளதாவது :

சிறுவர் நட்புறவுக்கூடங்களானது இடம்பெயர்ந்த சிறுவர்களுக்கான கட்டமைக்கப்பட்ட செயற்றிட்டங்கள் மூலமாக அவர்களை உளத்தாக்கங்களிலிருந்து விடுவிக்கும் வகையிலான நிகழ்ச்சித்திட்டங்களை முன்னெடுத்து வருகின்றது. இந்தக் கட்டமைப்புகளின் மூலம் சிறுவர்களின் உணர்வுகள், கருத்துக்களை வெளியிட வாய்ப்பளிக்கப்படுவதோடு, ஏனைய சிறுவர்களிடமிருந்தும் இளம்பராயத்தினரிடமிருந்தும் புதிதாக சில நல்ல விடயங்களை கற்றுக்கொள்ளவும் ஏதுவாகவுள்ளது. இந்தத் திட்டங்கள் அவர்களை இயல்பான முன்னேற்றங்களுக்கு இட்டுச்செல்கின்றன எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

## பொதுத்...

(1ஆம் பக்கத் தொடர்ச்சி)

பேர் குடியமர்ந்துள்ளனர். ஒட்டிசுட்டானில் 473 குடும்பங்களைச்சேர்ந்த 1,584 பேர் அடங்கலாக முல்லைத்தீவு மாவட்டத்தில் மொத்தமாக 5,118 குடும்பங்களைச் சேர்ந்த 15,503 பேர் மீள்குடியமர்ந்துள்ளனர் என முல்லைத்தீவு மாவட்ட அரசாங்க அதிபர் இமல்டா சுகுமார் தெரிவித்தார்.

வவுனியாவில் நிவாரணக்கிராமங்களிலிருந்து வெளியேறி உறவினர்களுடன் தங்கியிருக்கும் 2,216 பேர் கடந்த 13ஆம் திகதி பெரிய பரந்தன், திருநகர் வடக்கு மற்றும் மேற்கு, கரச்சி ஆகிய பகுதிகளில் மீள்குடியேற்றம் செய்யப்பட்டனர். தற்போது வவுனியா வடக்கில் மீள்குடியேற்றப் பணிகள் இடம்பெறறு வருகின்றன. தொடரும் மீள்குடியேற்றத்தின் அடிப்படையில் எதிர்வரும் பொதுத் தேர்தலுக்கு முன்னர் 90 வீதமானோர் மீள்குடியமர்த்தப்படுவர் என வவுனியா மாவட்ட அரச அதிபர் பீ.எஸ்.எம். சார்ள்ஸ் தெரிவித்தார்.

இதேவேளை, வடக்கிலிருந்து வெளியேற்றப்பட்ட முஸ்லிம் மக்களின் மீள்குடியேற்றம் எதிர்வரும் மே மாதம் உத்தியோகபூர்வமாக ஆரம்பிக்கப்படும் என மீள்குடியேற்ற அனர்த்த நிவாரண சேவைகள் அமைச்சர் ரிஷாட் பதியுதீன் தெரிவித்திருந்தமை குறிப்பிடத்தக்கது.

## சொந்தத் தொழில்களில் ஈடுபடமுடியாதவர்களை

# எமது மென்.உணவுத் திட்டத்தில் இணைத்துக் கொண்டுள்ளோம்

- தேவேஷ் ஷங்கர்



உலக உணவுத் திட்டத்தின் யாழ் காரியாலயத்திற்குப் பொறுப்பான **தேவேஷ் ஷங்கர்** அந்த நிறுவனத்தினால் இடம்பெயர்ந்த மக்கள் மற்றும் மீளக் குடியமர்த்தப்பட்ட மக்கள் மத்தியில் முன்னெடுக்கப்படும் உணவுத் திட்டங்கள் தொடர்பான தனது கருத்துக்களை எம்முடன் பகிர்ந்துகொண்டார்.




**உலக உணவுத் திட்டத்தின் யாழ். காரியாலயத்தினால் எவ்வகையான நடவடிக்கைகள் முன்னெடுக்கப்பட்டு வருகின்றன?**

உலக உணவுத் திட்டத்தின் யாழ். காரியாலயத்தினால் பல நடவடிக்கைகள் முன்னெடுக்கப்பட்டு வருகின்றன. உதாரணமாக பாடசாலை மாணவர்களுக்கான உணவுத் திட்டத்தை முன்னெடுத்து வருகின்றோம். நாங்கள் யாழ். குடாநாட்டில் கிட்டத்தட்ட 95,000 மாணவர்களுக்கு உணவு வழங்கி வருகின்றோம். இதைவிட, தாய் சேய் போஷாக்கு உணவுத் திட்டத்தின் மூலம் 48,000 கர்ப்பிணித் தாய்மார், பால் கொடுக்கும் தாய்மார் மற்றும் ஐந்து வயதுக்கு உட்பட்ட குழந்தைகளுக்கான உணவுப் பொருட்களை வழங்கி வருகின்றோம்.

*மீளக்குடியமர்த்தப்பட்ட ஒவ்வொருவரிடமும் நிவாரண அட்டை இருக்கின்றது. உணவுப் பொதியைப் பெற்றுக்கொள்ளும்போது அங்கே அவர்கள் கையொப்பமிட வேண்டும்.*

வவுனியா நிவாரணக் கிராமங்களிலிருந்து விடுவிக்கப்பட்ட 73,000 மக்கள் யாழ்ப்பாணத்தில் மீளக் குடியமர்த்தப்பட்டிருக்கின்றார்கள். அவர்களுக்கு ஆறு மாத காலத்திற்கான உணவுப் பொதிகளையும் நாம் வழங்கி வருகின்றோம். இதற்கு மேலதிகமாக நாம் வேலைக்கான மென் உணவுத் திட்டம் ஒன்றையும் முன்னெடுத்து வருகின்றோம். இந்தத் திட்டத்தில் கிட்டத்தட்ட 50,000 பேர் வரை உள்வாங்கப்பட்டுள்ளார்கள். இவர்கள் கான்களை சுத்தம் செய்து வருகின்றனர். டெங்கு நோயைக் குறைப்பதற்கும் இந்தப் பணிகள் உதவுகின்றன. இதனை விட பாவனையில்லாத கட்டடங்களையும் சுத்தம் செய்து வருகின்றோம்.

**யாழ்ப்பாணத்திலும், வடக்கின் மற்றைய பிரதேசங்களிலும் உள்ள மக்கள் இவ்வாறான உதவிகளை எவ்வாறு பெற்றுக்கொள்ள முடியும்?**

இந்த நடைமுறை கிராம சேவையாளர் பிரிவுகளிலிருந்து ஆரம்பிக்கின்றது. மீளக் குடியமர்த்தப்பட்டவர்களின் விபரங்களைக் கொண்ட பட்டியல் அவர்களிடம் இருக்கின்றது. இந்தப் பட்டியல் பிரதேச செயலகங்களுக்கு அனுப்பப்படும். அவர்கள் அதைக் கச்சேரிக்கு அனுப்புவார்கள். கச்சேரியில் மாவட்டக் கண்காணிப்புப் பிரிவு ஒன்று உள்ளது. அவர்கள் எங்களுக்கு ஒவ்வொரு பிரதேச செயலகப்பிரிவிலும் உள்ள மக்கள் தொடர்பான விபரங்களை அனுப்புவார்கள். இந்த உணவுப்பொதிகள் பிரதான பலநோக்குக் கூட்டுறவு சங்கத்திடம் ஒப்படைக்கப்படும். அங்கிருந்து ஒவ்வொரு கிராம சேவையாளர் பிரிவிலும் உள்ள கூட்டுறவு சங்கங்களுக்குக் கொடுக்கப்படும். இதுபற்றி பத்திரிகைகள் மூலம் மக்களுக்குத் தெரியப்படுத்துகின்றோம். மீளக்குடியமர்த்தப்பட்ட ஒவ்வொருவரிடமும் நிவாரண அட்டை இருக்கின்றது. உணவுப் பொதியைப் பெற்றுக்கொள்ளும்போது அங்கே அவர்கள் கையொப்பமிட வேண்டும்.

**நீங்கள் மென் உணவுத் திட்டம் பற்றிக் கூறியிருந்தீர்கள். அது எவ்வாறு உங்களது வழமையான உணவுத் திட்டத்திலிருந்து வேறுபடுகின்றது என்று கூற முடியுமா?**

இந்தத் திட்டமானது ஒரு நாளுக்கு 2.7 கிலோகிராம் வீதம் பதினொரு வேலை நாட்களுக்கு வழங்கப்படுகின்றது. உலக உணவுத் திட்டத்தினால் வழங்கப்படும் உதவிகளுக்கு மேலதிகமாக இவை கொடுக்கப்படுகின்றது. சாதாரண வேலைக்கான உணவுத் திட்டத்தில் உள்ளடக்கப்பட்டுள்ள நடைமுறைகள் இதனைவிட வேறுபட்டதாக இருக்கும்.

**இந்த உணவுப் பொருட்கள் எந்த அடிப்படையில் வழங்கப்படுகின்றது எனக் கூற முடியுமா?**

கடந்த மார்ச் - ஏப்ரல் மாதமளவில் பொருளாதார ரீதியாகப் பாதிக்கப்பட்டவர்களுக்கான ஒரு நிகழ்ச்சித் திட்டத்தை முன்னெடுத்திருந்தோம். இவர்கள் யுத்தம் காரணமாக தமது தொழில்களில் ஈடுபட முடியாதவர்களாக இருந்தார்கள். இவர்களுக்கான உணவுப் பொதிகள் மே - ஜூன் மாதம் வரையும் வழங்கப்பட்டன. யுத்தம் முடிவடைந்த பின்னர் அவர்களது தொழில்களில் மக்கள் ஈடுபட்டனர். எனினும் அவ்வாறு ஈடுபட முடியாது போனவர்களை எமது வேலைக்கான மென் உணவுத் திட்டத்தில் இணைத்துக்கொண்டுள்ளோம். இதனை விட வறுமைக் கோட்டின் கீழ் உள்ளவர்களையும் இணைத்துள்ளோம். இவர்களுக்கென 1400 தொன் உணவுப் பொருட்களை ஒதுக்கியுள்ளோம்.

**இந்த நடவடிக்கை யாரால், எவ்வாறு மேற்கொள்ளப்படுகின்றது என்று கூற முடியுமா?**

நாங்கள் அனைத்துப் பிரதேச செயலகங்களுக்கும் இந்த நடைமுறை பற்றி அறிவித்திருக்கின்றோம். முதலாவது கட்டமாக நாங்கள் எங்களது முதல் உணவுப் பொதி பட்டியலில் இருந்தவர்களை இணைத்துக் கொண்டோம். இந்தப் பட்டியலில் வறுமைக்கோட்டின் கீழ் உள்ளவர்களும் சமுர்த்தி திட்டத்தில் வறுமையால் பாதிக்கப்பட்டவர்களும் இணைக்கப்பட்டுள்ளார்கள். இந்தப் பட்டியல் கிராம சேவையாளர்களால் தயாரிக்கப்பட்டு, பிரதேச செயலகங்களுக்கு அனுப்பப்பட்டு பின்னர் கச்சேரிக்கு அனுப்பப்படுகின்றது.

**வவுனியாவிலிருந்து மீளக் குடியமர்த்தப்பட்ட ஒருவருக்குக் கொடுக்கப்படும் உணவுப் பொதிக்கு மேலதிகமாக அவர் வேலைக்கான மென் உணவுத் திட்டத்திலும் இணைக்கப்படுவாரா?**

இல்லை, ஒருவருக்கு ஒரு திட்டத்தின் கீழ் மட்டுமே உதவி வழங்கப்படும். ஆனால், அவர் உதவி பெறும் திட்டம் முடிவடைந்து அவர் இன்னும் கஷ்டப்படும் நிலையில் இருந்தால் அவரை இன்னொரு திட்டத்தில் இணைத்து அவருக்கான உதவியை வழங்குவோம்.

**ஒரு குடும்பத்தில் உள்ளவர்கள் பிரிந்த நிலையில் வெவ்வேறு காலப் பகுதியில் வெளியேறினால், அந்தக் குடும்பம் தொடர்பான விபரத்தை எவ்வாறு முதலில் பட்டியலிடுவீர்கள்?**

அந்தப் பட்டியல் கிராம சேவையாளர்களினால் தயாரிக்கப்படுகின்றது. உதாரணமாக,

*ஒருவருக்கு ஒரு திட்டத்தின் கீழ் மட்டுமே உதவி வழங்கப்படும். அவர் உதவி பெறும் திட்டம் முடிவடைந்தும் கஷ்டப்படும் நிலையில் இருந்தால் அவரை இன்னொரு திட்டத்தில் இணைத்து உதவியை வழங்குவோம்.*

ஆகஸ்ட் மாதத்தில் 4000 பேர் வந்திருந்தால், அவர்கள் எங்களுக்கு அது தொடர்பாக அறிவிப்பார்கள். இந்த உணவுப் பொதிகள் யாரிடம் செல்கின்றது என்று எம்மால் கூற முடியாது. எனினும், பெப்ரவரி மாதமளவில் இந்த 4000 பேர் இணைத்துக்கொள்ளப்பட மாட்டார்கள். ஒரு குடும்பத்தின் ஒரு பகுதியினர் செப்டெம்பர் மாதம் வந்தால் அவர்களுக்கு அந்த மாதத்திலிருந்து ஆறு மாதத்திற்கு உணவுப் பொதி வழங்கப்படும். இது மிகவும் சிக்கலான நடைமுறை. ஆறு மாதங்களின் பின்னர் நாம் உணவுப் பொதிகளை அவர்களுக்கு மீண்டும் வழங்குவதில்லை.

# மீள்குடியேற்றத்தின் பின்னர் முதல் முறையாக கிளிநொச்சியில் பாடசாலை விளையாட்டுப் போட்டிகள்

*டி.சார்ள்ஸ் பீட்டர்ஸ்*

வடக்கில் யுத்தத்தின் கொடூரத்தை அனுபவித்த மக்கள் தங்களது சொந்த இடங்களில் அரசாங்கத்தினால் தற்போது மீளக் குடியமர்த்தப்பட்டு வருகின்ற நிலையில், கடந்த கால கசப்பான அனுபவங்களை மறந்து சமூக வாழ்வுக்குத் தங்களைத் தயார்படுத்தியும் வருகின்றார்கள். மீள்குடியேற்றப் பணிகள் ஆரம்பிக்கப்பட்டதன் பின்னர், முதல் முறையாக கிளிநொச்சியிலுள்ள பாடசாலையொன்றில் இல்ல விளையாட்டுப் போட்டிகள் கடந்த புதன்கிழமை (17) நடைபெற்றன.

**மோதல் காரணமாக மனதளவில் பாதிக்கப்பட்டு எத்தனையோ இழப்புகளை சந்தித்த மாணவர்கள், இப் போட்டிகளில் உற்சாகமாக பங்குபற்றினார்கள்**



■ **வைப்பகப்படம்** விளையாட்டுப்போட்டி ஒன்றின் போது

கிளிநொச்சி ஜெயபுரம் மகாவித்தியாலயத்திலேயே இல்ல விளையாட்டுப் போட்டிகள் நடத்தப்பட்டன. இவ்விளையாட்டுப் போட்டிகளானது மாணவர்களிடையே புத்துணர்ச்சியை ஏற்படுத்தியிருப்பதாக அப்பாடசாலையின் அதிபர் திருமதி ஸ்ரீ ரதி தெரிவித்தார்.

இதுபற்றி அவர் மேலும் கூறுகையில், 'பூநகரி பிரதேசத்திற்குட்பட்ட பகுதியில் 95 வீதமான மக்கள் மீளக் குடியமர்த்தப்பட்டுள்ள நிலையில், 606 மாணவர்களுடன் எமது பாடசாலை நடவடிக்கைகள் ஆரம்பிக்கப்பட்டன. மீள்குடியேற்றம் நடைபெற்றதன் பின்னர் முதல் தடவையாக எமது இல்ல விளையாட்டுப் போட்டியை நடத்துவதையிட்டு மகிழ்ச்சியடைந்தோம். மோதல் காரணமாக மனதளவில் பாதிக்கப்பட்டு எத்தனையோ இழப்புகளை சந்தித்த மாணவர்கள், இப் போட்டிகளில் உற்சாகமாக பங்குபற்றினார்கள். கிரிக்கெட், கரப்பந்தாட்டம், பூப்பந்தாட்டம் (பட்மிண்டன்) போன்ற பயிற்சிகள் மாணவர்களுக்கு வழங்கப்பட்டுள்ளதோடு, போட்டிகளிலும் அவர்கள் பங்குபற்றினார்கள்' என அவர் கூறினார்.

இதேவேளை, தமது பிள்ளைகளின் மனோநிலையில் மாற்றத்தைக் கொண்டுவருவதற்காக ஏற்பாடு செய்யப்பட்ட இவ்வில்ல விளையாட்டுப் போட்டிக்கு தன்னாலான அனைத்து உதவிகளையும் செய்ததாக பாடசாலை மாணவர் ஒருவரின் தந்தையான தர்மராஜா ராஜகுமாரன் தெரிவித்தார்.

இதுபற்றி அவர் மேலும் தெரிவிக்கையில், 'இந்த இல்ல விளையாட்டுப் போட்டியை ஆசிரியர்கள் மிகவும் சிரமப்பட்டு நடத்துகிறார்கள். அவர்களுக்கு ஒத்துழைப்பு வழங்கும் வகையில் மைதானத்தை சுத்தப்படுத்தல்,

**கிரிக்கெட், கரப்பந்தாட்டம், பூப்பந்தாட்டம் (பட்மிண்டன்) போன்ற பயிற்சிகள் மாணவர்களுக்கு வழங்கப்பட்டுள்ளதோடு போட்டிகளிலும் அவர்கள் பங்குபற்றினார்**

இல்லங்களை அமைத்தல் போன்ற நடவடிக்கையை நாம் மேற்கொண்டோம். இவ்விளையாட்டுப் போட்டியால் எமது பிள்ளைகள் மகிழ்ச்சியாய் இருக்கிறார்கள். யுத்த சூழ்நிலையால் மனதளவில் பாதிக்கப்பட்டிருந்த எமது பிள்ளைகளின் முகத்தில் மாற்றத்தைக் காணக்கூடியதாக இருக்கிறது' என்றார்.

அத்தோடு எத்தனையோ கவலைகள் மனதிலிருந்தபோதும் இவ்விளையாட்டுப் போட்டிகளானது தங்களுக்கு ஆறுதலைத் தந்துள்ளதாக பாடசாலையின் மாணவியான பெருமாள் சிரசாந்தி தெரிவித்தார்.

'நாங்கள் பல துன்பங்களுக்கு முகங்கொடுத்து எத்தனையோ இழப்புக்களை சந்தித்தோம். இவ்வாறான சூழ்நிலையில் இந்த விளையாட்டுப் போட்டி நடத்தப்படுவதானது எமக்குப் பெரும் ஆறுதலாக இருக்கிறது' என சிரசாந்தி தெரிவித்தார்.

இதேவேளை, இந்த இல்ல விளையாட்டுப் போட்டியானது தமக்கு மிகப் பெரிய உற்சாகத்தைத் தந்துள்ளதாக பாடசாலையில் க.பொ.த. உயர்தரத்தில் பயிலும் மாணவரான சிரஞ்ஜீவன் தெரிவிக்கையில், '2008ஆம் ஆண்டில் பாடசாலை இல்ல விளையாட்டுப் போட்டிகள் நடைபெற்றதன் பின்னர் தான் நாம் இடம் பெயர்ந்தோம். பல இன்னல்களையும், துன்பங்களையும் சந்தித்த நாம் மீண்டும் சொந்த இடத்தில் மீளக் குடியமர்த்தப்பட்டு இல்ல விளையாட்டுப் போட்டிகளில் பங்குபெற்ற சந்தர்ப்பம் கிடைத்ததானது பெரும் மகிழ்ச்சியளிக்கிறது' என்றார்.

யுத்தத்தின் கொடூரத்தால் உளரீதியாகப் பாதிக்கப்பட்ட மாணவர்களின் வாழ்வில் மாற்றத்தை ஏற்படுத்தும் இவ்வாறான நிகழ்ச்சிகள் ஏனைய மீள்குடியேற்றப் பகுதிகளிலும் நடைபெறுமாயின், மாணவர்களிடையே மகிழ்ச்சியை ஏற்படுத்தும் என்பதே பலரதும் கருத்தாக இருக்கின்றது.

## உங்களிடமிருந்து...

### ஊருக்குப் போயிருந்தேன்..!





கனநாள் கழித்துக் கிடைத்த
விடுமுறையொன்றில்
ஊருக்குப் போயிருந்தேன்!

அங்கு எதுவுமே எனக்கு
முன்பு சந்தோசமளித்தது
போன்று இருக்கவில்லை!

பிள்ளையாரடிச் சந்தியும்
புளியடிக் கோயிலும்
வெறிச்சோடிக்கிடப்பதைக்
கண்ட எனக்கு

யுத்த கால இருட்டுக்குள்
எங்கள் ஊரார் வாழ்வு
கறுத்துக் கிடப்பது தெரிந்தது!

ஆசையோடு நான் சந்திக்கும்
முந்தைய நாளைய என்
பாடசாலை சிநேகிதன்
நீயில்லாத இடைவெளியில்
மரக்காலொன்றும்
ஊன்றுகோலொன்றும்
பரிசாகக் கிட்டியதாகச் சொல்லி
என்னைக் கட்டியணைத்தான்!

**ச. டினேசன்**
வீ. இல. 895
வலயம் - 11
இராமநாதன் முகாம்

### நீ சென்ற பின்னர்...



*நான் தனிமரமாக
தனித்திருக்கிறேன்
சமுதாயம் சொல்கிறது
இன்னும் வாழ்க்கை
மீதமிருக்கிறதென்று!
பட்டுப்போன என்னை
சோலையாக்கி
அழகுபடுத்திய நீ
சென்றதன் பின்னர்
வசந்தங்கள் எனக்கெதற்கு?*

**கா. ஷர்மிளா**
வீ. இல. 40
இராமநாதன் நலன்புரி நிலையம்

### பகல் கனவு



*தண்ணீரில் நான் இருந்தாலும் - என்
தாகம் இன்னும் தீரவில்லை
உறக்கமின்றி நான் உலாவினாலும்
கனவு காண்பது மட்டும் குறையவில்லை
காண்பது பகற் கனவு ஆயினும்
என் பழாய்ப்போன
மனத்திற்கு மட்டும் புரியவில்லை*

**ஆ. யாழினி**
அருணாச்சலம் ந.பு.நி.
செட்டிக்குளம்

### பிரியமான தோழி 'மீண்டும் வாழ்வோம்' பத்திரிகையே,

விரக்தியடைந்த என் மனதை விசாலமாக்கிய நீ சுமந்து வரும் அனைத்து ஆக்கங்களும் என்னைக் கவர்ந்தவையே! பூந்தளிர் பகுதி, உங்கள் கதைகள் என்பவை எனக்கு மிகவும் பிடித்த பகுதிகள். நாங்கள் எங்கு சென்றாலும் நீ எங்கள் கைகளில் கிடைக்க வேண்டும். உன் சேவை தொடர எம் வாழ்த்துக்கள்!

**நீக்கிலாஸ் எலைக்சாந்தி**
வீ. இல. 54
வலயம் - 38
இராமநாதன் நலன்புரி நிலையம்

உணர்வுகள் சிதைக்கப்பட்டு வேதனையால் சிறைப்பிடிக்கப்பட்ட எம் அனைவரினதும் மனதை உன் பரந்த மனிதாபிமான சேவையால் ஆற்றுப்படுத்துகிறாய். எட்டுப் பக்கங்கள் சுமந்து வரும் உன் அனைத்து ஆக்கங்களும் அருமை! தினமும் உன் வரவை எண்ணி காத்திருக்கிறேன்.

**ஜெ. பதுஷா**
வலயம் 4
செட்டிக்குளம்.

## இடம்...

(1ஆம் பக்கத் தொடர்ச்சி)

தொடர்வதற்காக வவுனியா நெலுக்குளம் பிரதேசத்திலும் பாடசாலை ஒன்று ஆரம்பிக்கப்பட்டுள்ளது. முல்லைத்தீவு கல்வி வலயத்திற்குக் கீழ் இந்தப் பாடசாலையினையும் முகாம்களில் உள்ள பாடசாலைகளையும் இயக்குவதற்கான நடவடிக்கைகளை வடமாகாண கல்வி அமைச்சு மேற்கொண்டு வருகின்றது.

இது தொடர்பில் வடமாகாண கல்வி அமைச்சின் செயலாளர் இலட்சுமணன் இளங்கோவன் தெரிவிக்கையில், அங்கு கல்வி கற்கும் மாணவர்கள் மீளவும் தமது சொந்த இடங்களில் குடியமர்த்தப்படும்போது எந்தவொரு பிரச்சினையுமின்றி கல்வியைத் தொடர்வதற்கான சகல வசதிகளையும் தாம் செய்து வருவதாகவும் அதற்கான உதவிகளை ஜனாதிபதியின் செயலணிக்குழு, மாகாண சபை, கல்வி அமைச்சு ஆகியன இணைந்து முன்னெடுப்பதாகவும் குறிப்பிட்டார்.

இந்தப்பாடசாலை நடவடிக்கைகள் ஆரம்பிக்கப்பட்டதனால் தமக்குப் பெரும் உதவியாக இருப்பதாக காமினி மகாவித்தியாலயத்தில் உயர்தரத்தில் கல்விகற்கும் தர்மலிங்கம் நிதர்சன் தெரிவித்தார்.

அவ்வப்போது ஒவ்வொரு பாடசாலைகளாக மாறி கல்வி கற்று வந்த நாங்கள் தற்போது ஒரே பாடசாலையில் கற்கிறோம். எங்களுக்கு இங்கு கற்க சுலபமாக இருக்கின்றது. அங்கு கற்பித்த ஆசிரியர்களே இங்கும் எமக்குக் கற்பிப்பதால் இலகுவாகப் பாடங்களைப் புரிந்துகொள்ளக்கூடியதாக இருக்கின்றது என நிதர்சன் மேலும் குறிப்பிட்டார்.

மீண்டும் வாழ்வோம் (Lifeline) செயற்றிட்டமானது USAID இனால் நிதியளிக்கப்பட்டு Internews Network இனால் நடைமுறைப்படுத்தப்படுகின்றது.

INTERNEWS

USAID FROM THE AMERICAN PEOPLE




**குறள் 16**

நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி
தான்நல்கா தாகி விடின்.

**விளக்கம்:**
மேகமானது கடல்நீரை முகந்து சென்று மீண்டும் மழையாகப் பெய்யாவிட்டால், அப்பெரிய கடலும் தன் அளவில் குறைந்து போகும்.

## சிறார்களின் கைவண்ணத்தில்....


இராமநாதன்
நலன்புரி
நிலையத்திலிருந்து


**ஸ்ரெனிஸ்லஸ் சஜிதா**
தரம் - 7, வலயம் 22
இராமநாதன் ந.பு.நி.


**ச.லோனா**
தரம் 9
வலயம் 18, இராமநாதன் ந.பு.நி.


**பெ.ரம்மியா**
தரம் 11
வலயம் 22, இராமநாதன் ந.பு.நி.


**செ.விக்னேஸ்வரன்**
வீ.இல. 12, தரம் 9
வலயம் - 33, இராமநாதன் ந.பு.நி.


**து. அதிஷ்ரா**
வலயம் 27
இராமநாதன் ந.பு.நி.

## ஆழமும் அகலமும்...

ஒரு தோட்டத்தில் ஒரு ஆலமரத்தையும் வாழையையும் தோட்டக்காரன் அருகருகில் நட்டு வைத்தான். ஆலமரம் வேர் பிடிப்பதற்குள் வாழை துளிர் விட்டு வளர ஆரம்பித்தது.

ஒவ்வொரு இலை விரியும்பொழுதும் வாழை ஆலங்கன்றைப் பார்த்துப் பெருமிதத்துடன் சிரித்துக்கொண்டேயிருந்தது. அந்தச் சிரிப்பு 'நான் எவ்வளவு வேகமாக வளர்கிறேன் பார்' என்று ஆலங்கன்றைப் பார்த்து நக்கலாக வாழை கேட்பது போல் இருந்தது.

விரைவில் பூத்து குலை தள்ளிக் காய்த்துத் தண்டெடுக்கப்பட்டு தரையில் விழுந்தது வாழை மரம்.

இப்போது ஆலமரம் வாழை மரத்தைப் பார்த்துச் சிரித்தது, 'வேகமாய் நீ வளர்ந்தது மடிவதற்காக. நான் மெதுவாய் வளர்கிறேன். உன்னைப்போல மேலோட்டமானதல்ல என்னுடைய வளர்ச்சி. மேலே வளரும் அளவிற்கு பூமிக்குள் வேர் செலுத்திக் கீழேயும் என்னை ஸ்திரப்படுத்திக்கொள்கிறேன். பன்னெடுங்காலமாய் பூமியில் என் விழுதுகளை ஊன்றி நான் வாழ்ந்திருப்பேன்' என்று சொல்லி ஆலமரம் சிரிப்பதுபோல் இருந்தது.

தாமதப்படுவதெல்லாம் பக்குவப்பட்டவையே. நிதானத்தால்தான் ஸ்திரத்தன்மையைப் பெற முடியும். பொறுமைதான் நிலைத்து நிற்க வழிவகுக்கும்.



## வாழ்க்கையின் வெற்றிக்கு சில கோட்பாடுகள்

- அர்த்தமில்லாமலும் தேவையில்லாமலும் பின் விளைவுகளை அறியாமலும் பேசிக்கொண்டிருப்பதை விடுங்கள்.
- தானே பெரியவன், தானே சிறந்தவன் என்ற அகந்தையை விடுங்கள்.
- சில நேரங்களில் சில சங்கடங்களை சகித்துத்தான் ஆக வேண்டும் என்பதை உணருங்கள்.
- நீங்கள் சொன்னதே சரி, செய்வதே சரி என்று கடைசி வரை வாதிடாதீர்கள்.
- அளவுக்கதிகமாய் தேவைக்கதிகமாய் ஆசைப்படாதீர்கள்.
- கேள்விப்படுகிற எல்லா விசயங்களையும் அப்படியே நம்பிவிடாதீர்கள்.
- உங்கள் கருத்துக்களில் உடும்புப்பிடியாய் இல்லாமல் கொஞ்சம் தளர்த்திக்கொள்ளுங்கள்.
- மற்றவர்களுக்குரிய மரியாதையைக் கொடுக்கவும் இனிய இதமான சொற்களைப் பயன்படுத்தவும் மறக்காதீர்கள்.
- பேச்சிலும் நடத்தையிலும் திமிர்த்தனத்தையும் தேவையில்லாத மிடுக்கையும் தவிர்த்து அடக்கத்தையும் பண்பாட்டையும் காட்டுங்கள்.
- அவ்வப்போது நண்பர்கள், உறவினர்களை நேரில் சந்தித்து மனம் திறந்து பேசுங்கள்.
- பிணக்கு ஏற்படும்போது அடுத்தவர் முதலில் இறங்கி வர வேண்டும் என்று காத்திருக்காமல் நீங்களே பேச்சைத் துவக்க முன்வாருங்கள்.
- தேவையான இடங்களில் நன்றியையும் பாராட்டையும் சொல்ல மறவாதீர்கள்.

## சிங்களம் සිංහල Sinhala — Let's COMMUNICATE கற்போம் Lesson 12

**பாடம் 12**

**Fruits - පළතුරු - பழங்கள்**

කෙසෙල්
கெசேல்
வாழைப்பழம்
Banana



අඹ
அம்ப
மாம்பழம்
Mango



තල්
தல்
பனம் பழம்
Palmyra fruit



## கண்டு பிடியுங்கள்

1,2,3,4,5,6,7,8,9 ஆகிய இலக்கங்களை பயன்படுத்தி விடையைக் காண்க. எந்த பக்கத்திலிருந்து கூட்டினாலும் கூட்டுத்தொகை 15 வர வேண்டும்.

| | | |
|---|---|---|
| | | |
| | | |
| | | |

**ஆக்கம் டி.தமிழரசி**
தரம் 10
பகுதி 06. வீ.இல. 223
இராமநாதன் ந.பு.நி.

**விடைகளை கீழ்காணும் முகவரிக்கு எழுதி அனுப்பிவைக்கவும். சரியான விடைகளை அனுப்புபவர்களின் பெயர்கள் அடுத்தவாரம் 'பூந்தளிர்' பகுதியில் பிரசுரிக்கப்படும்**

**மீண்டும் வாழ்வோம்**
**த.பெ.இல : 1039 கொழும்பு,**

# இருபதாண்டு அகதி வாழ்விற்கு முற்றுப்புள்ளி

## மேலும் சில வசதிகளைக் கோரி நிற்கும் முசலியில் மீளக் குடியமர்த்தப்பட்ட மக்கள்



■ முசலி கிராமத்தில் அமைந்துள்ள வீடுகள் சில.....

*டி.சார்ள்ஸ் பீட்டர்ஸ்*

நாட்டில் முப்பது வருட காலமாக இடம்பெற்று வந்த யுத்தத்தினால் மக்கள் சொல்லொண்ணாத் துயரங்கள் பலவற்றுக்கு முகங்கொடுக்க வேண்டி ஏற்பட்டது. யுத்தத்தின் பிரதிபலனாக இடப்பெயர்வுகளுக்கு முகங்கொடுத்த மக்கள் கசப்பான பல அனுபவங்களையும் எதிர்கொள்ள நேரிட்டது.

மன்னார் மாவட்டம் முசலி பிரிவிலுள்ள பண்டாரவெளி, பொற்கேணி ஆகிய பகுதிகளைச் சேர்ந்த மக்கள் 1990ஆம் ஆண்டு காலப்பகுதியில் சொந்த இடங்களைவிட்டு பலவந்தமாக வெளியேற்றப்பட்டவர்களாவர். புத்தளம் உட்பட நாட்டின் பல பகுதிகளிலும் சுமார் 20 வருடங்களாக அகதிகளாக வாழ்ந்து வந்த இம்மக்கள், தற்போது தமது சொந்த இடங்களில் மீளக் குடியமர்த்தப்பட்டுள்ளனர்.

> ‘போக்குவரத்து, சுகாதார வசதிகள் இங்கு இருக்கின்ற போதிலும், அதில் பற்றாக்குறை நிலவுகிறது’

அகதி என்ற முத்திரை அழிக்கப்பட்டு சொந்த மண்ணில் குடியமர்த்தப்பட்ட தாம் பெரு மகிழ்ச்சியில் இருப்பதாக அம்மக்கள் பெருமிதம் கொள்கின்றபோதிலும், தமக்கு மேலதிக அடிப்படை வசதிகள் ஏற்படுத்திக் கொடுக்கப்படுமாயின் பெரும் உதவியாக இருக்கும் எனவும் வேண்டுகோள் விடுத்துள்ளனர்.

மன்னார் பொற்கேணியைச் சேர்ந்த ஜமீலா உம்மா சுமார் 20 வருடங்களுக்கு முன்னர் தனது குடும்பத்துடன் அப்பகுதியிலிருந்து வெளியேற்றப்பட்டவராவார். இவர் தற்போது மீளக் குடியமர்த்தப்பட்டுள்ள நிலையில், அப்பகுதியிலுள்ள அடிப்படைப் பிரச்சினைகள் பற்றி கூறுகையில், ‘நாங்கள் எமது சொந்த மண்ணுக்கு மீண்டும் வந்து சேர்வோம் என கனவிலும் நினைக்கவில்லை. இங்கு நாங்கள் வசிப்பதற்கான அடிப்படை வசதிகளை அரசாங்கம் ஏற்படுத்திக்கொடுத்துள்ளது. ஆனாலும் ஒரு சில பிரச்சினைகளால் எமது அன்றாட வாழ்வை முன்னெடுத்துச் செல்வது கடினமாக இருக்கிறது. இங்குள்ள எமது சொந்த நிலத்தில் நாம் நெல் பயிரிட்டுள்ளோம். நெல் செழிப்பாக வளர ஆரம்பித்துள்ள இச்சந்தர்ப்பத்தில் காட்டு யானைகளின் தொல்லை அதிகரித்துள்ளது. இதனால் எமது பயிர்களுக்கு சேதம் ஏற்படுவதோடு, எமக்கும் ஆபத்தான நிலைமை தோன்றியுள்ளது. இப்பிரச்சினைகளைத் தீர்க்க நடவடிக்கை எடுத்தால் பெரும் உதவியாக இருக்கும்’ என்றார்.

இப்பகுதியைச் சேர்ந்த பாடசாலை ஆசிரியரான மொஹமட் காசீம் மீளக் குடியமர்த்தப்பட்ட தமக்கு மேலும் சில வசதிகள் ஏற்படுத்திக்கொடுக்கப்படுமாயின், தமது அன்றாட நடவடிக்கைகளைத் தங்குதடையின்றி முன்னெடுத்துச் செல்ல உதவியாக இருக்கும் எனக் கூறினார்.

> ‘நாங்கள் எமது சொந்த மண்ணுக்கு மீண்டும் வந்து சேர்வோம் என கனவிலும் நினைக்கவில்லை.’



இது தொடர்பில் அவர் மேலும் கூறுகையில், ‘சொந்த மண்ணில் எம்மை மீளக் குடியமர்த்தியமைக்காக நாம் அரசாங்கத்திற்கு நன்றி கூற கடமைப்பட்டுள்ளோம். அதேநேரம், எமக்கு இங்கு பல பிரச்சினைகள் இருக்கின்றன. போக்குவரத்து, சுகாதார வசதிகள் இங்கு இருக்கின்றபோதிலும், அதில் பற்றாக்குறை நிலவுகிறது. குறிப்பிட்ட நேரத்திற்கு மட்டும் பஸ் சேவை இருப்பதனால், எவருக்கேனும் சுகமில்லாமல் போனால், போக்குவரத்தை மேற்கொள்ள சிரமம் ஏற்படுகிறது. விஷப் பாம்புகளும் அதிகமாக இருக்கிறது. எமக்கு கிணறுகளின் தேவை அத்தியாவசியமானதொன்றாக இருக்கிறது. இங்குள்ள பல கிணறுகள் பல வருடங்கள் பாவனைக்குட்படுத்தப்படாத நிலையில், பாழடைந்துபோய் காணப்படுகிறது. அவற்றை துப்புரவு செய்வதற்கு நவீன இயந்திரங்கள் அவசியம். ஏனெனில், கிணறுகளில் பாம்புகள் அதிகமாக இருக்கின்றன. இவ்வாறான அடிப்படை வசதிகள் ஏற்படுத்திக் கொடுக்கப்படுமாயின் எமது அன்றாட ஜீவியத்தை எவ்வித குறையும் இல்லாமல் நாம் முன்னெடுத்துச் செல்வோம்’ என்றார்.

நீண்ட காலமாக உள்நாட்டிலேயே அகதி வாழ்க்கை வாழ்ந்த இம்மக்களை அரசாங்கம் தற்போது மீளக் குடியமர்த்தியுள்ளமையானது பலராலும் வரவேற்கப்பட்டுள்ளது. அதேவேளை, இம்மக்களின் தேவைகளை முழுமையாகப் பூர்த்தி செய்வது அரசாங்கத்தின் கடமையாக இருக்கின்றதெனவும் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

## ‘மீண்டும் வாழ்வோம்’ வானொலி நிகழ்ச்சி

**‘மீண்டும் வாழ்வோம்’’ வானொலி நிகழ்ச்சி நவம்பர் மாதம் தொடக்கம் புதிய பல அம்சங்களுடன் இலங்கை ஒலிபரப்புக்கூட்டுத்தாபனத்தின் தேசிய சேவையில் திங்கள் முதல் வெள்ளிவரை இரவு 9.30 முதல்10.00மணி வரையும் கிழக்கு மாகாணத்தில் பிறை எப்.எம்.வானொலியில் ஞாயிற்றுக் கிழமைகளில் பிற்பகல் 1.30 மணி முதல் 2.00 மணிவரையும் ஒலிபரப்பாகி வருகிறது. எமது நிகழ்ச்சி ஒலிப்பதிவுகளையும் இப்பத்திரிகையையும் http://lifeline.internews.lk/ என்ற இணையத்தளத்தில் தரவிறக்கம் செய்யலாம்.**



எமது நிகழ்ச்சிகள் குறித்த உங்களது கருத்துக்களை எழுதியனுப்புங்கள்.

## ‘சிறுவர் உதவி இணைப்பு’ செயற்றிட்டம்

வவுனியா மாவட்ட செயலகத்தின் குடும்ப உறவுகளைத் தேடும் பிரிவின் (Family Tracing Unit) ஒரு பகுதியாக ’சிறுவர் உதவி இணைப்பு’ (Helpline for Children) மாவட்டத்தின் அரசாங்க அதிபர் திருமதி.பி.எஸ்.எம்.சார்ள்ஸ் இனால் ஆரம்பித்து வைக்கப்பட்டது.

குடும்பங்களிலிருந்து பிரிந்த சிறுவர்களை மீள இணைத்தல், சிறுவர் துஷ்பிரயோகத் தடுப்பு முதலான விடயங்கள் இப்பிரிவினால் கையாளப்படும் எனத் தெரிவிக்கப்படுகிறது.

நன்னடத்தைச் சிறுவர் பராமரிப்புத் திணைக்களத்தோடு இணைந்து வவுனியா மாவட்ட செயலகம் முன்னெடுக்கும் இச் செயற்றிட்டத்துக்கு யுனிசெப் உதவி வழங்குகின்றது.

**024 222 55 66**



தற்போதைக்கு வார நாட்களில் காலை 8.30 இலிருந்து மாலை 5.30 மணிவரை இந்தத் தொடர்பிலக்கம் சேவையிலிருக்கும் எனத் தெரிவிக்கப்படுகிறது.

இப்பத்திரிகை எக்ஸ்பிரஸ் நியூஸ்பேப்பர்ஸ் (சிலோன்) லிமிட்டெட்டாரால் கொழும்பு - 14, கிராண்ட்பாஸ் வீதி, 185ஆம் இலக்கத்தில் 2010ஆம் ஆண்டு பெப்ரவரி மாதம் 21ஆம் திகதி ஞாயிற்றுக்கிழமை அச்சிட்டு வெளியிடப்பட்டது.